உ

சிவமயம்.

# மதுரைக்
## கண்ணங்கூத்தனார் செய்த
# கார் நாற்பது.



இஃது

உரையுடன்

சண்முகசுந்தரமுதலியா
ரவர்களாற் பரிசோதித்து

திரிசிரபுரம் புத்தகவியாபாரம்
சபாபதிபிள்ளை
யவர்களது
மட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

மிதுனரவி.

சிந்தாத்திரிப்பேட்டை சாமிநாயக்கர்வீதி-௪௮-நெம்பர்

சங்கமருவியபதினெண்கீழ்க்கணக்காவண
நாலடிநான்மணிநாஞற்பதைந்திணைமுப்
பால்கடுகங்கோவைபழமொழி-மாமூலம்
மெய்ந்நிலைகாஞ்சியோடேலாதியென்பவே
கைந்நிலையவாங்கீழ்கணக்கு.

வெண்பாவாம்.



உ

சிவமயம்.

# கார்நாற்பது மூலமும் உரையும்.



பொருகடல்வண்ணன்புனைமார்பிற்றார்போற் ... *
றிருவில்விலங்கூன்றித்தீம்பெயறாழ ... ... ... *
வருதுமெனமொழிந்தார்வாரார்கொல்வானங் ... *
கருவிருந்தாலிக்கும்பொழுது. ... ... ... ... *

(தோழிதலைமகட்குப் பருவங்காட்டி வற்புறீஇயது)

எ-து பொருகடலினதுநிறம்போன்ற நிறத்தினை யுடையான் புனைந்தமார்பிற் பூமாலைபோல விந்திரவி ல்விலங்காகவூன்றி யினியபெயல்விழாநிற்க வருவே மென்றுசொல்லினர் வாராரோ மழைகருக்கொண்டி ருந்து துளிகளைவிடாநின்றதாதலான். (க)

கடுங்கதிர்நல்கூரக்கார்செல்வமெய்த
நெடுங்காடுநேர்சினையீனக்-கொடுங்குழா
யின்னேவருவர்நமரென்றெழில்வான
மின்னுமவர்தூதுரைத்து.

(இதுவுமது.)

எ-து பகலோனுடைய கடுங்கதிர்கள்வறுமையு றக் கார்காலஞ்செல்வமுற நெடியகாடெல்லாமிகப்பய

ன்றாக் கொடுங்குழையையுடையாய் நமரிப்பொழுதே வருவரென் றெழிலையுடையமுகின் மின்னாநின்ற தவர் தூதாயறிவித்தது. (௫)

வரிநிறப்பாதிரிவாடவளிபோழ்ந்த
யிரமணற்றண்புறவினணி-பரள
வுருமிடி வானமிழிய வெழுமே
நெருநலொருத்திதிறத்து.

(பருவங்கண்டழிந்த தலைமகளாற்றல்வேண்டி
தோழிதனதாற்றாமைதோன்றவுரைத்தது.)

எ-து வரிநிறத்தையுடையபாதிரிப்பூ வாடும்வகை காற்றூடறுக்கப்பட்டுளமணலையுடையதண்புறவின்கணுலங்கட்டிபுரள வுருமிடிக்குமுகிலிழிதராநின்றதெழாநின்றது. நெருநல் தையலாளொருத்திமாட்டு வருந்துவான்வேண்டி-எ-று. அல்லது உநெருநற்றே தொடங்கித் தனியாண்மாட்டென்றுமாம். (௬)

ஆடுமகளிரினமஞ்ஞையணிகொள
காடுங்கடுக்கைகவின்பெறப்பூத்தன
பாடுவண்டூதும்பருவம்பணைத்தோளி
வாடும்பசலை மருந்து

(பருவங்காட்டித்தலைமகளைவற்புறுத்தியது.)

எ-து கூத்தாடுமகளிரேபோல மயில்களழகுபெறக் காடுகளுங்கொன்றைகளானழகுபெறப் பூத்தன

அப்பூக்களைப்பாடுவண்டுகளூதாநின்றன, ஆகலாற்ப ணைத்தோளி வாடும்பசலைக்கு மருந்திப்பருவம்-எ-று.

இகழுநர்ச்சொல்லஞ்சிச்சென்றார்வருதல்
பகழிபோ லுண்கண்ணாய் பொய்யன்மையீண்டைப்
பவழஞ்சிதறியவைபோலக்கோபம்
தவழுந்தகையபுறவு.

(இதுவுமது)

எ-து இகழ்வார்சொல்லஞ்சிப் பொருட்குச் சென்றார்வருதலம்புபோன்றவுண்கண்ணாய்பொய்யன் மையாம். இவ்விடத்துச் சிதறியபவழம்போலக் கோபங்கள்பரக்குந்தகைமையையுடையவாயின காடுகளாகலான். (௬)

தொடியிடவாற்றாதொலைந்ததோணோக்கி
வடுவிடைபோழ்ந்தகன்றகண்ணாய்வருந்தல்
கடிஇடிவானமுரறு நெறியிடைச்
சென்றாரைநீடின்மினென்று

(இதுவுமது.)

எ-து வளையிடத்துந்தங்காவாய்த் தளர்ந்ததோளை நோக்கி மாவடுவினுடையபோழ்ந்தாற்போல வகன்ற கண்ணினையுடையாய்வருந்தாதொழி, கடிதிடிக்குமழை முழங்கான்றது கொடியவழிச்சென்றாரை நீடாதொழி மினென்றுசொல்லி—எ-று. (௭)

நச்சியார்க்கீதலுநண்ணார்த்தெறுதலுந்
தச்செய்வான்சென்றார்வருஉந்தணியியலாய்
பொச்சாப்பிலாதபுகழ்வேள்வித்தீப்போல
வெச்சாரு மின்னு மழை.

(இதுவுமது.)

எ-து தம்மைநச்சியார்க்கீதலும் பகைவரைக்கெடுத்தலும் இவ்விரண்டுந்தம்மை விலைசிறுத்துவனவாக நினைத்துப்பொருட்குச்சென்றாரைக் கொண்டுவருவ தணிந்தவியல்பினையுடையாய் மறப்பில்லாதபுகழையுடைய வேள்வித்தீப்போல வெம்மருங்கு மின்னுகின்றமழை—எ-று, (எ)

மண்ணியன்ஞாலத்துமன்னும்புகழ்வேண்டிப்
பெண்ணியனல்லாய்பிரிந்தார்வரல்கூறுங்
கண்ணியலஞ்சனந்தோய்ந்தபோற்காயாவு
நுண்ணரும்பூழ்த்த புறவு.

(இதுவுமது.)

எ - து மண்ணியன்றவுலகத்துநிற்கும்புகழைவேண்டியபெண்ணியல்பையுடையநல்லாய் நலமாயப்பொருட்குப்பிரிந்தார் வருதலைச்சொல்லாநின்றது, கண்ணினியற்றப்பட்ட வஞ்சனத்தைத்தோய்ந்தனபோலக்காயாக்களும் நுண்ணியவரும்புகளை யலரப்பட்டபுறவுகள்—எ-று. (அ)

மண்ணீர்த்தெழும்பாம்பினறலைபோற்புணர்கோடல்
பூங்குலையீந்தபுறவு.

(இதுவுமது.)

எ-து பொருந்தியசெல்வத்தைக் கொளவேண்டிச்சென்றார்வினைக்குதன்முத்தலைவமபாலினையுடையாட் கிளர்ந்துவருதலைக்கூறுகின்றன, வண்ணங்கெழுந்தபாம்பின்படம்போலப்பொருந்திய கோடல்களாற்பூங்குலையீனப்பட்டபுறவுகள்—எ-று-ஐம்பால்-பெண்மயிர். (கக

மையெழிலுண்கண்மயிலன்னசாயலாய்
ஐயந்தீர்காட்சியவர்வருதனிண்ணிதா
நெய்யணிகுஞ்சரம்போலவிருங்கொண்மூ
வைகலுமேரு வலம.

(இதுவுமது.)

எ-து மையையுமெழிலையுமுடையவுண்கண்ணாய் மயிலன்னசாயலாய் ஐயந்தீர்ந்தவறிவினையுடைய நங்காதலர் வருதல்மெய்ம்மை, நெய்யணிந்தயானைகள் போலப்பெரியமுகில்களுடோறுமவலமாகவெழாநின்றவாதலான். (க௨)

ஏந்தெழிலல்குலாயேமார்ந்தகாதலர்
கூந்தல்வனப்பிற்பெயருமுவேந்தர்
களிறெறிவாளரவம்போலக்கண்வவ்வி
யொளிறுமின்னு மழை.

(இதுவுமது.)

எ - து. அழகினையுடைய வேங்கியவல்குலினையுடையாய் துணையோடு புணர்ந்தின்பமுற்றகாதலராகிய மகளிர்கூந்தலழகுபோலப்பெய்ய வரசர்களிற்றைபெருந்தவாளரவம்போலக்கண்டார் கண்ணைவவ்வியொளிவிட்டுமின்னுகின்றதுமழை ஆதலான்வருவார். (கங)

செலவுந்தரல்வேண்டிச்சென்றநங்காதலர்
வல்லேவருதறெளிந்தாம்வயங்கிழாய்
முல்லையிலங்கெயிறீனநறுந்தண்கார்
மெல்லவினிய நகும்.

(இதுவுமது.)

எ - து செல்வந்தேடிக்கொள்ளவேண்டிப்போயினநங்காதலர்விரைந்துவருதலைத்தேறினும்விளங்காநின்றவணிகளையுடையாய் முல்லைக்கொடிகண் (மகளி)ரிலக்கெயிறுபோலவிரும்புகை யழகியகுளிர்ந்தமுகில்கள்மெல்லவினியவாகவொலியாநின்றன. (கச)

திருந்திழாய்காதலர்தீர்குவரலலர்
குருந்தின்குவியிணருள்ளுறையாகத்
திருந்திளிவண்டொடவிருந்துமயி
லியின்குழலூதும்பொழுது.

(இதுவுமது.)

எ - து திருந்தியவணிகளையுடையாய் நங்காதலர்

யா மேயோர்க ளெனக்குத்துணையாகவேண்டி நெடியகா னத்தைக்கடந்துசென்றதென்மனம்-எ-று. (கக)

வீறுசால்வேந்தன்வினையுமுடிந்தன
வாறும்பதமினியவாயினவருமணி
நாகமுழுங்கச்செருமன்னர்சேனைத்
தான்போலச்செல்லுமழை.

எ-து சிறப்பமைந்தவேந்தனுடைய வினைகளு முடிந்தன,வழிகளுஞ்செவ்வியினவாயின,வருமணிநா கங்கள்வருந்தும்வகை யுருமேற்றோடுகூடிச்செருமன் னர்சேனைத்தானைப்போலச்செல்லாநின்றதுமுகில- எ

பொறிமாண்புனைதிண்டேர்போந்தவழியே
சிறுமுல்லைப்போதெல்லாஞ்செவ்வி-நறுநுதற்
செல்வமழைத்தடங்கட்சின்மொழிப்பேதைவாய்
முள்ளெயிறேய்ப்பவடிந்து.

(இதுவுமது.)

எ - து எந்திரச்செய்கைகளான் மாட்சிமைப்ப ட்டபுனைதிண்டேர்போந்தவழியே சிறுமுல்லைப்போது களெல்லாஞ் செவ்வியாகியவழகியநுதலையுஞ் செல்வ மழைபோன்றிருந்த கண்ணினையு மெல்லியமொழியி னையுமுடையபேதைவாயின்கண் முள்ளெயிறுகவை டிவுபட்டு-எ-று.(நின்றது-என்னும்பயனிலை,தொக்கது

இளையருமீர்க்கட்டியரவுளையணிந்து
புல்லுண்கலிமாவும்பூட்டியநல்லா
ரிளநலம்போலக்கவினிவளமுடையா
ராக்கம்போற்பூத்தனகாடு.

(இதுவுமது.)

எ-து சேவகரு மழகிதாகக்கட்டியுடுத்தலைச்செ
ய்ய சாமரையைத்தலையின்கணணிந்து புல்லுண்டகலி
மாவினையுந்தேரோடுபூட்டுதலைச்செய்யும்வகை நல்லா
ராகியமகளிரிளநலம்போலவழகுபெற்று வருவாயுடை
யாருடையசெல்வம்போலப்பூத்தனகாடு-எ-று. (௨௨)

கண்டிரணமுத்தங்கடுப்பப்புறவெல்லாந்
தண்டுளியாலிபுரளப்புயல்கான்று (லோ
கொண்டெழில்வானமுங்கொண்டன்றெவன்கொ
லொண்டொடியூடுநிலை.

எ. து தோழிதலைமகட்குப் பருவங்காட்டிவற்பு
றுத்தியது-எ-று. (௨௩)

எல்லாவினையுங்கிடப்பவெழுநெஞ்சே
கல்லோங்குகானங்களிற்றின்மதநாறும்
பல்லிருங்கூந்தல் பணிநோனாள்கார்வான்
மெல்லவுந்தோன்றுஞ் செயல். (௨௪)

கருங்காலவாகின்போரிப் போரபவரும்
விரும்நீர்க்தண்புறவிற்றெறுவிமலர்க்தன

கருஞ்செவிக்கத்தாளைமருண்மினீர்ச்சேர்ந்த
தெருமையெழிலேவெறிபவர்சூடிச்
செருமிருமள்ளரிற்செம்மாக்குஞ்செவ்வி
இருநுதறகியாளுசெய்குறி. (௧௧)
காலோடக்கொண்டகெடாஅப்புகழ்வேட்கைச்
செல்வர்மனம்போற்படாது
மகிழ்வண்டுபாண்முரலுங்கானம்
பிடாஅப்பெருந்தகைநற்கு. (௧௨)
கடனீர்முகந்தகமஞ்சூலெழிலி
குடமலையாகத்துக்கொள்ளப்பிறக்கு
யிடமெனவாங்கேகுறிசெயதேம்பேதை
மடமொழியெவ்வங்கெட. (௧௩)
விரிதிரைவெள்ளம் வெறுப்பப்பருகிப்
பெருவிறல்வானம்பெருவரைசேருங்
கருவணிகாலங்குறித்தார்திருவணிந்த
வொண்ணுதன்மாதர்திறத்து. (௧௪)
சென்றநகைகாதலர்சேணிகந்தாரொண்ணுதி
யொன்றியநோயொடிடும்மைபலகூர
வென்றிமுரசினிரங்கியெழிலவான
நின்றுமிரங்குமிவட்கு. (௧௫)
சிரல்வாய்வனப்பினவாகிநிரலொப்ப
நீர்த்தண்டளவந்தகைத்தனசீர்த்தக்க

செல்லுமழைமதர்க்கட்கின்மொழிப்பேதையூர்
கல்லீந்ததாககமக்கு. (கசு)
கருங்கடன்மேய்ந்தகமஞ்சூலெழிலி
யிருங்கன் குவளையேதியுயிர்க்கும்
பெரும்பதககாலையும்வாரார்கொல்வேந்த
னருகதொழிலவாய்த்தகமர் (கஎ)
புகர்முகம்பூழிபுரளவுமார
ஙிலைவெஞ்சினவேழமபிடியோடிணைதாழத்
தண்பதககாலையும்வாரார்ஒவன்கொலோ
வொள்டொடிபூகிலை. (கஅ)
அலவன்களைப்பவரும்பின்றவிழ்ந்த
கருங்குரனேச்சிப்பசுந்தழைசூடி
யிரும்புனமொக்கடிகொல்டார்பெருங்கல்லை
யாகின்றுநம்மூரவர்க்கு.

(இதுவுமது.)

எ-து அலவனது கண்ணினையேய்ப்பவரும்பினை யீன்று பின்மலர்ந்த கருங்கதிரினையுடைய னொச்சிப்பசுந்தழையைச்சூடிப்பெரும் புனங்களையுமவர்புதிதாகவே, குழுவிக்கத்தொடங்கினர்கள் ஆதலானம்மூரின்கட்பெரியவலராயிற்று நவகாதலராகியவர்க்கு—எ-று. (கசு)

வநதனஞ்செய்குறிவாராரவொன்று
கொந்தவொருத்திக்கூகோய்திர்மருந்தாகி.

பீர்ந்தின்கருவண்ணங்கொண்டதெழில்வான்
கந்துமென்பேதைநுதல்.

எ-து பருவங்காட்டித்தலைமகளைத்தோழிவற்புறுத்தியது. அவர்செய்குறிகளாறுந்தன, அவர்வருமிலரென்று தேர்ந்தவொருத்தியாகிய நினக்குநோய் தீர்க்குமருந்தா கியீகதின்கனியினிறம்போலக் கருநிறத்தைக்கொண்டதெழில்வான், மெல்லியபேதாய்நின்னுடையநுதலினி யொளிபெறநந்தும்—எ-று. ஈங்கென்பதனை-யீகதென்றுகுறுக்கியது. (௪௦)

## கார்நாற்பதுமூலமும்உரையும்

## முற்றிற்று.

இந்நூலில்-௨௯-வது செய்யுள்முதல்-௩௮-வது, செய்யுளவரைபிரதிகளிலுரைகாணப்படவில்லை. கல்விச்செல்வமிக்குடையார் தமது பிரதிகளிலுளதாயதெரிவிப்பாராயின (௨) வது முறையச்சிடுவதுடன் அச்சிட்டுத்தெரிவிப்போர்பெயரையும வெளியிடப்படும்.

இங்ஙனம்,

கொ-சண்முகசுந்தரமுதலியா

